கருடனும், வினதாவும் முனிவரை நமஸ்கரிக்கின்றனர். நாரதர் கமண்டல ஜலத்தினால் கருடனை ஆசீர்வதிக்கிறார். வினதாவிற்குத் தன் வணக்கத்தைத் தெரிவிக்கிறார்.

"தாயே! நீ உலகிற்கே தாய்! உன் மகன் கருமமே தன் பணி என எண்ணுபவன். நீங்கள் இருவரும் அறியாமையால் ஏற்பட்ட தீங்கின் விளைவுகளிலிருந்து விடுபட்டு, சுகமாக வாழ்வீர்களாக" என வாழ்த்துகிறார். (செய். — 31)

(இச்செய்யுள் இவ்வியாயோகத்தில் நிர்வஹண சந்தியைத் தெரிவிக்கின்றது. நிர்வஹணம் யாதெனில், கருடனும், வினதாவும் அடிமைத்தளையிலிருந்து விடுபடுதல்).

கருடனோ தனது தாயாரின் நிலையை நினைத்து வருந்துகிறான். தன்னால் இதன் காரணத்தைக் கண்டறிய முடியவில்லையே என அதனை ஆராய முற்படுகிறான். கத்ரு செய்த காரியத்தையும் தான் பாலியத்தில் தெரிந்து கொள்ளாத நிலையையும் நினைத்து வருந்தி, நாரத முனிவர் மூலம் இதற்குப் பரிகாரம் காணவேண்டும் என நினைக்கிறான். (செய். — 32, 33)

நாரதரை, "எங்கிருந்து வருகிறீர்கள்?" என வினவ அவர் எதிர்பாராதவிதமாக பாதாள லோகம் (ரசாதலம்) சென்றதாகவும், அங்கு பலிச்சக்கரவர்த்தியிடம் சிறிது நேரம் பேசிவிட்டு, ஆதிசேஷன் வீட்டிலுள்ள கத்ருவை வணங்கிவிட்டு நேராக இங்கே வருவதாகவும் தெரிவிக்கிறார்.

ஆதிசேஷன் தனது சகோதரனல்லவா? சாஸ்திரங்களைக் கற்பிக்கும் குருவாகவும் விளங்கி, அனேக மாணவர்க்கு குருவாகவும் இருந்தாரே! தன்னைச் சிறு வயதில் ஆதரவுடன் நடத்தினாரே! என்று நினைவுகூர்ந்து,

மட்டற்ற மகிழ்ச்சியுடன், ஏதேனும் செய்தியனுப்பியுள்ளாரா? என்று கருடன் வினவுகிறான். (செய். — 34)

மந்தர மலையை மத்தாகக் கொண்டு, ஆதிசேஷனைக் கயிறாக ஆக்கி அமிருதம் கடைந்ததையும் கருடன் நினைவு கூர்கிறான். (செய். — 35)

நாரதர் கூறுகிறார்: உலகில் உறுதியுடனிருப்பவனும், தாய்-தந்தையர்க்குப் பணி செய்பவனும், பிறர்க்குத் தீங்கு செய்யாமலிருப்பவனும், புருஷர்களில் மேலானவன்.
(செய். — 36)

இதனைக் கேட்டு கருடன், தான் ஆதிசேஷனின் சீடன் என்றும், பிரம்மதேவனின் நண்பன் என்றும், பிரம்ம வித்துக்களைக் காப்பது தன் கடமை என்றும் நாரதர் முன்னிலையில் தெரிவிக்கிறான். (செய். — 37)

கத்ரு, தன் தாயாருக்கு ஏதாவது விவரம் சொல்லி அனுப்பியுள்ளாரா? என்றும் கருடன் நாரதரை வினவுகிறான்.

நாரதர்: ஆம், தீங்கு செய்யும் பாம்புகளைக் கொல்வதற்காகவே கருடன் படைக்கப்பட்டான். ஆதலால் தீங்கு செய்யும் பாம்புகளை மட்டும் கருடன் கொல்லட்டும். திருவிழாக் காலங்களில் சூரியன் ரதத்தில் வைக்கப் பட்டுள்ள பாம்புகளைக் கொல்வது சரியா? முன்பு ஒரு தடவை சூரியனின் தாபத்தால் பாம்புகள் கருண்டு விழுந்தன. கத்ரு இந்திரனைப் பிரார்த்தித்தாள். இந்திரனும் மழையை உண்டுபண்ணி பாம்புகளைக் காப்பாற்றினான். ஆதலால் தீங்கு செய்யாத பாம்புகளைக் கொல்ல என்ன அதிகாரம் இருக்கிறது எனக் கேட்டாள்.
(செய்யுட்கள் — 38, 39)

இதைக் கேட்டதும் கருடனுக்கு கோபம் வர, நான் என்ன இவள் (கத்ருவின்) அடிமையா எனக் கூக்குரலிடு

கின்றான். வினதா தன் தனயனின் கோபத்தைக்கண்டு இது தன் விடுதலைக்கு அறிகுறியாகும் எனச் சந்தோஷப் படுகிறாள்.

நாரதர் கருடனுக்கு ஹிதமாகப்பேசி, கருடனின் கோபத்தை ஆக்க வழியில் திருப்ப முனைகிறார். தன் தாய்க்கு கத்ருவால் ஏற்பட்ட கஷ்டங்களை அறிய கருடன் முற்படுகிறான். காரணம் யாதென நாரதரை வினவு கிறான். ஆரம்பத்திலிருந்து சொல்ல நாரதரைக் கேட் கிறான்.

நாரதர் பூர்வ பீடிகை போட்டுகொண்டு கருடனிடம் விளக்கமளிக்கிறார் (செய் — 40)

கருடன் தன் முழு பலத்தையும் உபயோகித்து உலகத் தையே தூள்தூளாக்கி விடுகிறேன், அனுமதியளியுங்கள் என்ன செய்யவேண்டுமென்று சொல்லுங்கள் என்று வீராவேசத்துடன் கூறுகிறான். (செய் — 41)

இதைக் கேட்ட வினதாவின் கண்களில் நீர் ததும்பு கிறது. நாரதர் கருடனின் வீரமான பேச்சைக் கேட்டு உள்ளூர மகிழ்ந்து விரைங்களைக் கூறி கருடனை உத்சாகப் படுத்துகிறார். கஸ்யப முனிவர் கேட்டுக் கொண்டதற் கேற்ப வாலகில்யர்கள்[1] என்ற கட்டைவிரல் பருமனுடைய வேதவித்துக்கள். புத்திரகாமேஷ்டியாகம் ஒன்றைச் செய்தனர். அப்பொழுது யாருடைய யோசனையையும் கேட்காமல் இந்திரன் தானே அகம்பாவத்துடன் ஒரு சமித்தை எடுத்து யாக குண்டத்தில் போட்டான். கர்வத் துடன் இத்தவறை இழைத்த இந்திரனுக்கு புத்தி புகட்டுங் கள் என்று கஸ்யபரிடம் விண்ணப்பித்துக்கொண்டு.

---

1. வாலகில்யர்கள் : கட்டை விரல் பருமனுள்ள வேதவித்துக்கள். அவர்கள் சூரியனின் கிரணங்களை கிரஹித்துத் தவம் செய்பவர்கள். (Puranic Encyclopaedia. p. Motilal Banarsidos, 19)

கோபம் கொண்ட வாலகில்யர்கள் யாகம் அறைகுறையாக இருக்கும்பொழுதே சென்றுவிட்டனர். அவர்கள் வேண்டு கோளுக்கிணங்கி, இந்திரனுக்கு பாடம் புகட்ட பராக்ரம சாலியாக உள்ள கருடனாகிய உன்னை கஸ்யபர் படைத் திருக்கிறார். பக்ஷிராஜனாகிய நீ அக்காரியத்தை வெற்றி யுடன் முடிக்க வேண்டும் என்று கருடனிடம் நாரதர் கூறினார். (செய்யுட்கள் — 42, 43)

கருடன் தான் அவ்வாறே செய்வேன் எனவும் தனது பலத்தால் (அலகின் வலிமையால்) இப்ப்ரம்மாண்டத் தையே கலக்கி விடுகிறேன் என்றும் ஆவேசத்துடன் கூறு கிறான்.

தாயார் வினதாவிற்கு தன் குமாரனின் வீராவேசத் தைப் பார்த்து மட்டற்ற மகிழ்ச்சி ஏற்படுகிறது. நாரதரும் வினதாவும் கருடனை சாந்தப்படுத்தி. விரோதிகளைக் கொல்லக்கூடாது. இதற்கு ஒரு வழி செய்வோம் எனக் கூறுகின்றனர். தங்களுக்கு வேண்டிய விடுதலையைப் பெறுவோம் (என நாரதர் கூறுகிறதற்கேற்ப) கருடன் சரி என்கிறான். (செய் — 45)

வினதா அமிருத கலசத்தை (தேவர்களிடமிருந்து) கொண்டுவந்துவிட வேண்டும் என விருப்பம் தெரிவித்தாள். நாரதரும் அதனை ஆமோதித்தார். இருவரும் எல்லாக் காரியங்களும் நல்ல விதத்தில் முடியும் என்று எண்ணுகின் றனர். தங்க வர்ணமுள்ளவனும், பலம் பொருந்திய இறக்கை களையுடையவனுமான கருடன் எல்லாக் காரியங்களையும் செய்து முடிப்பான் என நாரதர் எண்ணுகிறார். (செய் — 46)

நாரதர் : கருடா ! உன் தாயும் சத்ருவும் சிறுவயதில் விளையாட்டாகப் பேசிக்கொண்டிருக்கும்பொழுது தேவ லோகத்திலுள்ள உச்சைஸ்ரவஸின்* வால் கருப்பா,

* உச்சைஸ்சிரவஸ் என்பது தேவலோக குதிரை.

வெளுப்பா என விவாதம் வந்தது. உன் தாய் வினதா வெளுப்பு என்றாள், கத்ரூ கருப்பு என்றாள். யார் சொல்வது சரி என்று நேரில் பார்க்கத் தீர்மானித்தனர். யார் சொல்வது தவறோ, அவள் மற்றவளுக்கு அடிமையாக வேண்டும் என நிபந்தனை. உண்மையில் அதன் வால் வெளுப்புதான். ஆனால் கத்ரூ தன் பிள்ளைகளான கருநாகங்களைக்கொண்டு, வாலைச் சுற்றிக் கட்டி. அதைக் கருப்பாகக் காட்டி வினதாவை ஏமாற்றிவிட்டாள். இவ்வாறு வஞ்சனையாக அவள் வினதாவை அடிமையாக்கி விட்டாள். இந்த அடிமைத் தனத்தை நீக்குவது உன் கடமை யாகிறது என்று விவரித்தார். (செய்யுட்கள் — 47, 48)

கருடனும் பெரிய தாயாரின் தந்திரத்தை அறிந்து வியப்பெய்துகிறான். வினதாவும் இவ்வளவு காலம் வார்த்தைக்குக் கட்டுப்பட்டு அடிமைத்தனத்தை பொறுத்துக்கொண்டு, கருடன் வருத்தப்படக்கூடாது என்று இது வரை தெரிவிக்கவில்லை என்று கண்களில் நீர்மல்கச் சொல்கிறாள். (செய் — 49)

தாயார் முன்னதாகச் சொன்ன ஏற்பாட்டின்படி செய்து முடிக்கத் தீர்மானிப்பதாக கருடன் சொல்கிறான். (செய் — 50)

நாரதர். மகிழ்ச்சிகொண்டு வினதாவிடம் கருடன் நினைத்த காரியத்தை சாதித்துவிடுவான் என்று சொல் கிறார். கருடன் மஹாபலசாலி என்றும், இந்திரனின் வஜ்ராயுதத்தைத் தாங்கும் வலிமை கருடனுக்கு மட்டுமே உண்டு. பாம்புகளிடமிருந்து வரும் விஷத்தை முறிக்கும் மருந்து கருட மந்திரமேயாகும் என்றும் தெரிவிக்கிறார். (செய் — 51)

கருடன் தாதகஸ்யபருடைய உத்தரவு யாதெனக் கேட்க, நாரதர் மேலும் கூறுகிறார், கஸ்யபர், கத்ரூவிற்கு ஆயிரம் பிள்ளைகளையும், வினதாவிற்கு இரண்டு குழந்தைகளையும் அருளினார். (செய் — 25)

தனது தமையனான அருணன் மூவுலகங்களையும் சஞ்சாரம் செய்யும் சூரியனின் தேரோட்டியாக மிகத் திறனுடன் விளங்குகிறான் என்று கருடன் கூற(செய்—53)

வினதா தன் கஷ்டங்களைக் கூறுகிறாள். (செய்—54)

நாரதர் கஸ்யபரின் முடிவினைத் தெரிவிக்க(செய்—55)

தாயின் விளக்கம் தன்னை ஆயிரம் ரம்பங்களால் அறுப்பது போன்றுணர்ந்து கஷ்டத்திற்குப் பரிகாரம் செய்துவிடுவதாக கருடன் உறுதி கூறுகிறான். (செய் — 56)

வினதா இரண்டு முட்டைகளிட்டதையும், ஒன்று பாதியில் அவசரத்தில் உடைக்கப்பட்டதையும், மற்றொன்று பரிபூர்ணமாக ஏற்பட்டதையும் கூறி தன் சோகத்தை வெளிப்படுத்தினாள். இவற்றிற்கு முடிவு கட்ட கருடனின் தகப்பனார் கஸ்யபர், வாலகில்யர்கள் முன்னதாக கேட்டுக்கொண்டதற்கேற்ப ஹிமகிரிக்குத் தவம் செய்ய சென்றுவிட்டார் என்றும் கூறினாள்.
(செய். —57)

அத்துணை நல்லெண்ணத்துடன் தகப்பனார் சென்றிருக்கிறாரா என்று கண்ணீர் மல்க கருடன் கேட்கிறான்.
(செய் — 68)

கருடன் சாந்தமடைந்து தன் காரியத்தைச் செய்ய முற்படுகிறான். (செய் — 59)

நாரதர் கருடனை மறுபடியும் போற்றி, அவன் எடுத்த காரியத்தை முடிக்கத் தகுதியானவன் என்று உற்சாகப்படுத்துகிறார். (செய் — 60)

அருணன் ஏன் அங்கஹீனனாக இருக்கிறான் என அச்சமயம் கருடன் வினவ, குற்றம் என்னிடமே உள்ளது என வினதா தெரிவிக்கிறாள். குறையுடனுடன் மூத்த பிள்ளையைப் பெற்றெடுக்கும் துர்ப்பாக்கியவதியாகி விட்டேன் என வினதா சஞ்சலப்படுகிறாள்.

நாரதர் வினதாவையும் கருடனையும் சாந்தப்படுத்தி கவலைகொள்ள வேண்டாம் எல்லாக் கஷ்டங்களும் விலகி விடும் என்று கூறுகிறார். உலக நீதியையும் அச்சமயம் விளக்குகிறார். (செய் — 61)

நாரதர் தன் கண்ணீரைத் துடைக்க வந்தவர் என்றும், தன் கஷ்டங்களைத்தான் அனுபவித்தாகி விட்டது என்றும், அருணன் சூரியனின் தேரோட்டியாக நியமிக்கப்பட்டுவிட்டான் என்றும் தெரிவித்து, தற்போது கருடன் அமிருத கலசத்தைக் கொண்டுவர வேண்டுமென்றும் கேட்டுக்கொண்டாள். (செய் — 62)

கருடன் இதனைக் கேட்டு, காலம்தான் இவற்றிற்கெல்லாம் காரணம். காலமே இக்காரியங்களையெல்லாம் (எதிர்காலத்தில்) நிவர்த்தி செய்யும். அது என் தந்தையையும், தமையனையும் ஒன்று சேர்க்கும் என்றும் நினைத்து சமாதானமடைகிறான். செய்யுட்கள் 63, 64 காலத்தைப்பற்றி இலக்கிய நயத்துடன் விவரிக்கின்றன.

செய். 65ல் கருடன் தொடர்ந்து நாரதரிடம் கருத்துக் கேட்க, செய். 66ல் நாரதர் உலக விவகாரத்தைப் பற்றி விளக்கி, செய். 67ல் கருடன் செய்ய முற்பட வேண்டியதைக் கூறுகிறார். கத்ருவின் பிள்ளைகள் வேறு ஏதாவது விரும்புவார்களா என நாரதரிடம் கருடன் கேட்கிறான்.

அச்சமயம் நாடோடி போன்ற ஒரு புருஷன் வருகிறான். வந்த புருஷன் வினதாவையும், நாரத முனிவரையும் வணங்குகிறான். கருடன், ஆ, இவன் ஆதிசேஷனுடைய சிடனான டுண்டுபன் அல்லவா என்று தெரிந்து கொள்கிறான். சாஷ்டாங்கமாக அப்புருஷன் விழுந்து எழுகிறான். கருடன் அவனை அணைத்துக் கொள்கிறான். ஆதிசேஷன் நலம்தானா என கருடன் வினவுகிறான். ப்ராக்ருதத்தில் செய்யுள் 68 அமைக்கப் பட்டுள்ளது. டுண்டுபன் பிரவேசிப்பதும் அவன் பேச ஆரம்பிக்கும் சொற்களும் இதில் அடங்கும். (செய் — 70)

ஆதிசேஷன் விநதாவை வணங்குவது டுண்டுபனால் தெரிவிக்கப்படுகிறது. கருடனும் டுண்டுபனும் ஏற்கனவே ஆதிசேஷனிடம் வித்தை பயின்றவர்களாதலால், ஒருவரை ஒருவர் உச்சிமுகர்ந்து கட்டிக்கொள்வது விவரிக்கப்படுகிறது. (செய் — 70)

டுண்டுபன் என்ற அந்த புருஷன் ஆதிசேஷனிடமிருந்து ஒரு கடிதத்தை கருடனிடம் அளிக்கிறான். அக்கடிதத்தில், கத்ருவும் ஏனைய பாம்புகளும் கவலைப்படுவதால் கருடன் அமிருதத்தை கொண்டுவந்து கொடுத்தால், தாயின் அடிமைத்தனம் நீங்க வழிவகுக்கும் என்று குறிக்கப்பட்டிருந்தது. (செய் — 71)

கருடனும் இவ்வேற்பாடு தெய்வானுகூலத்தினால் நல்ல விதத்தில் முடியும் என்று மகிழ்ச்சியடைகிறான். வேறுவிவரம் ஏதாவது உண்டா என கருடன் கேட்க, இந்த அவசர கடிதத்தைத் தவிர வேறு ஒன்றுமில்லை என டுண்டுபன் தெரிவிக்கின்றான்.

பிருகஸ்பதி, சுக்கிரன் இவர்களின் ஆலோசனையில், அவர்கள் விஷயங்களைப் பேசி செய்திகளை அனுப்பும் போது அறிஞர்களாலேயே அவற்றை அறியமுடியாமலிருக்கும்போது, பாமரன் எப்படி அறியமுடியும் என கருடன் ஆச்சரியப்படுகிறான். (செய் — 72)

அச்சமயம் நாரதர் சொல்கிறார் :—

"கருடா, அமிருதத்தைக் கொண்டுவந்து கொடுத்து தாயின் அடிமைத்தனத்தைப் போக்குவேன் என்று நீ சொன்னதை, ஆகாயத்தில் நடமாடும் பாம்புகள் மூலம் தெரிந்து அவர்கள் அதையே ஒரு நிபந்தனையாக வைத்திருக்கிறார்கள். அமிருதத்தை சாப்பிட்டுவிட்டால் தன் குழந்தைகளின் உயிருக்கு ஆபத்து ஏதும் வராது என்று கத்ரு எண்ணுகிறாள். ஆகவே நீ சீக்கிரம் அமிருத (கலச)த்தை கொண்டு வருவதில் முனைந்திரு".

கருடனும் உடனே கிளம்புவதற்குத் தயாராகி தன் இறக்கைகளை ஒரு தடவை விரித்து மூடிக்கொள்கிறான். ஆதிசேஷன் அனுப்பிய புருடனிடம் கீழ்க்கண்ட செய்தியை சொல்லியனுப்புகிறான்.

''எனது பிரியமான வணக்கத்தைக் கூறவும். தங்கள் கடிதத்தின் விஷயங்கள் தெரியவந்தன. நீங்கள் ரகசியமாகப் பேசிக்கொண்டதை நாரத முனிவர் மூலம் அறிந்தேன். உங்கள் ஆசிர்வாதத்தால் இந்திரனையும் நான் ஜெயித்து அமிருதத்தைக் கொண்டுவருவேன். நாகர்கள் இலங்கையில் சமுத்திரக் கரையில் தெற்கு திசையில் தயாராக இருக்க வேண்டும். அவர்களிடம் அமிருத கலசம் ஒப்படைக்கப்படும். அதன் மூலம் நான் தாயின் அடிமைத்தனத்தை நீக்கி விடுதலை பெறச் செய்வேன், என் வார்த்தையையும் காப்பாற்றுவேன்.''

செய்யுட்கள் (73, 74, 75)

அப்புருஷனும் சரி எனச் சொல்லி விடைபெறுகிறான். நாரதர் கருடனைக் கட்டி அணைத்து உச்சிமுகர்ந்து ஆசிர்வதிக்கிறார்''. சேஷன், ஆதிகூர்மம், வராஹம் (முதலிய விஷ்ணுவின் அவதார புருஷர்கள்) உனக்கு தைரியமளிக்கட்டும். சாமர்த்தியமாக தேவர்களின் படையைச் சமாளிப்பாயாக. கடவுள் உனக்கு வெற்றியையளிக்கட்டும்.''

(செய்யுட்கள் — 76, 77)

இவ்வாறு நாரதரால் ஆசிர்வதிக்கப்பட்ட கருடன், தாயார் வினதாவின் பாதங்களை வணங்கி அவளிடமிருந்தும் வாழ்த்துக்களைப் பெறுகிறான். இங்கே இருந்துகொண்டே என் வெற்றிக்குப் பிரார்த்திப்பாயாக என வேண்டிக்கொள்கிறான். ஏனென்றால் தாயின் பாசத்தோடு கூடிய பிரார்த்தனைதான் பயனளிக்கும் எனக் கூறுகிறான்.

(செய் — 78)

(பொதுவாக ஆங்கிலத்தில் ''மார்ட்டி டி ஆர்தர்'' என்ற கவிதையில் டென்னிஸன் என்ற கவிஞரின் வாக்கியம்

கனவில்கூட நினைத்துப்பார்க்க முடியாத காரியங்கள் [பிரார்த்தனையால் கைகூடும்] இவ்விடத்தில் நினைவு கொள்ளத் தக்கது)

வினதாவும் அவ்விதமே மங்களாசாசனம் செய்கிறாள். முன்னொரு காலத்தில் சோமலதையைக் கொண்டு வந்த காயத்ரீதேவிக்கு ஏற்பட்ட மந்திரங்களாலேயே பிரார்த்தனை செய்கிறேன் எனக் கூறுகிறாள். (செய் – 79)

(80-வது செய்யுளில்) கருடனுக்காக வினதா செய்யும் பிரார்த்னைச் செய்யுளில் கவி தனது கவிதா சக்தியைக் காட்டுகிறார். ஈ என்ற ஒலியுடன் கூடிய வார்த்தைகளை 'யமகம்' என்ற அலங்காரத்தில் 80-வது செய்யுளில் கவி கையாண்டுள்ள பாங்கு போற்றற்பாலது.

நாரதரும் வினதாவை சமாதானப்படுத்திவிட்டு, கந்தர்வராஜன் வசுபூதியின் விமானத்தில் ஏறிக்கொண்டு (நடக்கப்போகும் சண்டையைப் பார்க்கக் கிளம்புகிறார்.

கருடன் வேறு தீவுகளில் புலால் உண்ணும் பிரம்மத் துவேஷிகளை அழிக்க வேண்டும் என்ற எண்ணத்துடன் மேலே எழும்புகிறான். வினதா, சிகப்பு வர்ணத்துடன் மேலே எழும்பும் தனது மகன் கருடனைப்பார்த்து மனதில் உவகை கொண்டு பிரார்த்திக்கிறாள். (செய் — 81)

"ஓம் நமோ பகவதே புராண சுபர்ணாய" என்ற மந்திரத்தை உச்சரித்துக்கொண்டு, (திரையின் வேறு பக்கம் சென்று கீழ்நோக்குகிறான்.) கீழே பெரும் வனாந்தரங் களும் மரங்களும் தென்படுகின்றன. அங்கு வேடர்கள் கூட்டம் கூட்டமாக இருக்கின்றனர். அவர்கள் ஒருவரை யொருவர் காட்டெருமையைப் போல் தாக்குதலில் தங்களை ஈடுபடுத்திக் கொண்டிருக்கின்றனர். அவர்களை ஒழித்துவிட வேண்டுமென்று இறக்கையை மடக்கி கருடன் இறங்குகிறான். (செய்யுட்கள் — 82, 83)

அங்கு காட்டுப் பாதையில் ஒரு புருஷன் ஏதோ தியானத்தில் மூழ்கினவனாகக் காணப்படுகிறான். (செய்-84)

கருடன் அவனைக் கண்ணுற்று விவரங்களை அறிய முற்படுகிறான். (செய்யுட்கள் — 85, 86)

பிராகிருதத்தில் எழுதப்பட்டுள்ள 87-ம் எண்ணுள்ள செய்யுள் அப்புருஷனின் எண்ணங்களை வெளிப்படுத்துகின்றன. அப்புருஷன் அரங்கத்தில் பிரவேசிக்கிறான். கருடன் அப்புருஷனை அணுகியபொழுது, அவன் முதலில் கருடனைக் கண்டு பயந்து, பின்னர் தான் ஓர் அந்தணன் எனத் தனது யஞ்ஞோபவீதத்தைக் கருடனுக்குக் காண்பிக்கிறான்.

அம்மனிதன் அந்தணனாக இருந்தும் தான் விரும்பிய காதலியை நினைத்துப் பயித்தியம் பிடித்தவன் போல் அலைகிறான் என அறிகிறான். தான் ஒரு காசி வாசி பிராம்மணன் எனவும் கூறித்தன் விருத்தாந்தங்களைத் தெரிவிக்கிறான். வேடராஜன் மகளான பத்மினி என்பவளைக் காதலிப்பதாகவும், அவள் வேறு ஒருவனைக் கலியாணம் செய்து கொண்டதாகவும் கூறுகிறான். இருந்த போதிலும் தன் பேரில் அவள் இச்சைக்கொண்டுள்ளதால் தான் அவளை நினைத்து அலைவதாக கருடனிடம் கூறுகிறான். (செய்யுட்கள் 88 முதல் 90 வரை அம்மானுடன் விவரங்கள் கவியால் கூறப்படுகின்றன.) பிரம்மசாரியாக விளங்கும் கருடன் செய்யுள் 91-ல் அவ்வந்தணனின் அறவழிகளை வினவுகிறான்.[1] கருடனின் பிரம்மசரியக் கொள்கையையும், சிறிதளவில் சிருங்கார ரசத்தைப்

---

1 அந்தணன் ஒருவனை காசிப் பிராம்மணன் என்று கூறுவதிலும், அவன் விஸ்வாமித்ர கோத்திரத்தை சேர்ந்தவன் என்று கூறுவதிலும், கவிஞர் ஏதோ உள்ளர்த்தம் வைத்துள்ளார் எனக் கருதலாம்.

பற்றியும் கவிஞர் இவ்விடத்தில் விமர்சிக்கிறார். செய். 92 உடன் இம்மனிதனைப் பற்றிய விவரம் முடிவடைகிறது.

செய்யுள் — 93 மூலம் கருடன், ஒரு பெரிய தாத்பர்யத்தைக் கூறுகிறார்.

அங்கிருந்து கிளம்பிய கருடன், வேடர்கள் ஒருவருக்கொருவர் முன்விரோதம் காரணமாகச் சண்டையிடுவதைப் பார்த்து, அவர்களின் கடுமையான சண்டையினை ஒழிக்க, அவர்களைத் தன் அலகாலும், நகங்களாலும், இறக்கைகளினாலும் தாக்கி அழிக்கிறான். சண்டையிட்டுக் கொண்டிருந்த வேடர் கூட்டம் அழிவது விவரிக்கப்படுகிறது. (செய்யுட்கள் — 94, 95)

பலர் தலைகளை இழந்து முண்டங்களாகின்றனர். சிலர் கைகளை இழந்து அவஸ்தைப்பட்டுப் பின்னர் உயிரிழக்கின்றனர். செய். — 96, 97, 98 நேர்த்தியாக அமைக்கப்பட்டுள்ளன.

பிறகு இச்சண்டையிலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டு கருடன், மத்யவேளை வந்துவிட்டபடியால் தலைக்கு மேலுள்ள சூரியனின் தேரோட்டியான தன் தமையனான அருணனை வணங்கி ஆசீர்வாதம் பெற விழைகிறான்.

அடுத்துவரும் செய்யுட்கள் 99, 100, 101, 102, 103, 104 முதலியவை சூரிய வர்ணனையை விவரிக்கின்றன.

வேதத்தில் கூறியபடி சூரியனைக் கணக்கற்ற மந்தேஹர் என்ற அசுரக் கூட்டங்களிலிருந்து காக்கும் தன் தமையன் அருணனின் திறமையைப் பாராட்டுகிறான். பிரம்மாவிடமிருந்து அருணனைத் தன் தேரோட்டியாக்க வேண்டும் என்ற சூரியனின் பிரார்த்தனையின் ரகசியத்தை இப்பொழுது அறிகிறேன் என்று எண்ணிக்கொண்டு சூரியனையும், அருணனையும் கருடன் வணங்குகிறான்.

தன் தமயனைப் பார்த்ததும் கருடனுக்குச் சகோதர பாசம் பளிச்சிடுகிறது. கண்களில் ஆனந்த பாஷ்பம் பொங்குகிறது. 105-ஆவது செய்யுளில் தனது பாசத்தைக் கருடன் வெளிப்படுத்துகிறான். 106-ஆவது செய்யுளில் இடைவிடாமல் சூரியனுடனேயே சுற்றிக்கொண்டிருக்கும் தனது தமையனின் தன்மையை நினைத்து ஆச்சரியமடைகிறான்!

தாயின் குற்றத்தால் தான் அங்கஹீனனாகப் பிறந்தும் அதை லட்சியம் செய்யாமல் தன்னிடம் சகோதர பாசத்தை வெளியிடும் அருணனிடம், "அண்ணா! நம் தாயின் அடிமைத்தனம் நீங்க அமிருதகலசம் கொண்டுவரச் செல்கின்றேன். ஆசிர்வதியுங்கள் என்னை" என்று வேண்டுகிறான்.

அருணனும் "உனக்கு, துர்கையும், தூணிலிருந்து வெளிப்பட்ட நரஸிம்மமூர்த்தியும் உன் கஷ்டங்களைப் போக்கி வெற்றியை அளிப்பார்கள்" என ஆசிர்வதிக்கின்றான். இவ்விஷயங்கள் 107, 108, 109 ஆகிய செய்யுட்களில் விவரிக்கப்படுகின்றன. சொல்நயம், பொருணயம், ப்ராஸம், யமகம் முதலிய அலங்காரங்கள் கையாளப்பட்டு, சப்த ஜாலங்களுடன் இச்செய்யுட்கள் மிளிர்கின்றன. இவற்றுள் வரும் ஒரு செய்யுள் கீழே தரப்பட்டுள்ளது:—

'ரம்பா ரம்போரூரம்பா நிபயுவதி பரீரம்பஸம்பாவனாபிஹி
ஜம்பாரித்வா திலம்பாத் புவி திவி லோபகம் பாவிதம்
பாவயந்தஹ !
ஸம்ரம்பாபுக்னஜ்ரும்பா விகடித நயனப்ருபுடம்
பாவிதாரேஹே
ஸம்பாவிர் பாவதம்பா மதுதமித ரலம் பாவுகம்
பாவயந்து ॥ (செய். – 109)

கருடன், அருணனிடம் தகப்பனார் கஸ்யபர் எந்த இடத்தில் தவம்புரிந்து வருகிறார் எனப் பார்த்துச்

சொல்லும்படி வேண்டுகிறான். (வன சஞ்சாரம் செய்து வரும்) அருணன் கந்தமாதன பர்வதத்தில் தாழ்வறைகளில் கஸ்யபர் சிஷ்யர்களுடன் தவம்புரிந்து வருகிறார் எனத் தெரிவிக்கவே (செய். — 110) கருடன் சந்தோஷத்துடன் தமயனிடம் விடைபெற்றுத் தந்தை இருக்குமிடம் நோக்கிப் பறக்க ஆரம்பிக்கிறான். அருணனும். "தந்தையைப் பார்த்துவிட்டு, அவரிடமும் ஆசிபெற்று. எடுத்த காரியத்தில் வெற்றி பெறுவாயாக" என வாழ்த்தி விடையளிக்கிறான்.

கருடனும் அங்கிருந்து கிளம்பி கந்தமாதன பர்வதத்தைப் பார்த்து, அம்மலையின் மரங்கள். பூக்கள். கனிகள் இவைகளின் நேர்த்தியை வர்ணித்துக்கொண்டே அப்பிரதேசத்தை வட்டமிடுகிறான். தனது நீண்ட பலமான அலகை மேலே உயர்த்திக்கொண்டு வட்டமிட்டுக் கொண்டு அதி வேகமாக வரும் கருடனைப் பார்த்து, ஏதோ ஆபத்து வருகிறது என நினைத்து கஸ்யபரின் ஆசிரம வாசிகள் சாந்தி பாடங்களைப் படிக்க ஆரம்பிக்கின்றனர்.

கவி சிரேஷ்டராகிய கோவிந்தாசார்யர். மேற்கண்ட வர்ணனைகளை (செய்யுட்கள் 111 முதல் 120 வரை) மிக நேர்த்தியாக விவரிக்கிறார். கலவரப்படும் முனிவர்களின் நடுவில் சாந்தமாக அமர்ந்திருக்கும் தன் தந்தை கஸ்யபரைக் கண்ணுற்றான். உடனே. அசுரர்கட்கும் தேவர்கட்கும் குருவான தன் தந்தையை "ஆதிசேஷனின் சிஷ்யனாகிய கருடன் நமஸ்கரிக்கின்றேன்" என்று சொல்லி பாதகமலங்களில் வீழ்ந்து நமஸ்கரிக்கின்றான். (செய் —121)

தவத்தால் இளைத்திருக்கும் கஸ்யபரை, பயந்த அவரது மாணவர்கள் அணைத்துக் கொள்ளும்போது அவருக்கு மயிர்க்கூச்சல் ஏற்படுகிறது. சிடர்களின் அணைப்பிலேயே மகிழ்ச்சியடையும் கஸ்யபர். தன்னுடைய புத்திரனான கருடன் வந்து நமஸ்காரம் செய்ததை ஆச்சரியத்துடனும் மகிழ்ச்சியுடனும் ஏற்று, கருடனைச்

சந்தோஷமாகப் பார்த்து. "வரவும். எங்னைக் கட்டிக் கொள். உன்னை உச்சிமுகர்ந்து மகிழ்ச்சியடைகிறேன்" என்றுகூறி அணைத்துக்கொள்கிறார். (செய். — 122, 123)

அங்குள்ள முனிச்ரேஷ்டர்களும் இக்காட்சியைக் கண்டு வியப்பெய்துகின்றனர். கடைசி மகன் (கனிஷ்ட புத்திரன்) என்றால் பெற்றோர்களுக்கு மகிழ்ச்சி ஏற்படுவது சகஜம் என்று பேசிக்கொள்கின்றனர். (செய் — 124)

கஸ்யபர், கருடனிடம் முனிபுங்கவர்களை வணங்கு மாறு கூற. அவ்வாறே கருடன் அவர்களை வணங்குகிறான்.

முனிவர்கள். "கருடா! நீ சிறியவனாக இருந்தாலும். சூரியன்போல் வணங்கத்தக்கவன். வயதால் மாத்திரம் எவரும் பெரியவர்களாகக் கருதப்படுவதில்லை. ஆகவே உன் தந்தை உனக்கு என்ன ஆசிர்வதிப்பாரோ அது உண்மையாக நேரட்டும்'' என ஆசி கூறுகின்றனர்.
(செய். — 125)

கஸ்யபருடைய சிடர்கள் ஆசிரியரை வணங்கி, இவர் யார்? என மகிழ்ச்சியுடன் வினவுகின்றனர். கஸ்யபர். உங்களது நண்பனெனக் கருதுங்கள் என்றுகூற. அவர்கள் குதூகலத்துடன் கருடனின் மேல் விழுந்து கட்டிக்கொள் கின்றனர். (செய். — 126)

கருடனும். "என் தந்தையின் சிடர்கள் என்பதாலேயே நீங்கள் புண்ணியசாலிகள். உங்களுக்கு வேறு என்ன நான் சொல்ல முடியும்'' என உணர்ச்சிவயப்படக் கூறு கிறான். (செய் — 127)

கருடனுடைய பாதங்களில் விழுந்து அவர்கள் வணங்கு கிறார்கள். கருடன், அவர்கள் நான்குவித புருஷார்த்தங் களையும் அடையவேண்டும் என (செய். 128) ஆசிர்வதிக் கிறான். கஸ்யபர் சொல்லொணா மகிழ்ச்சியுடன்

"குழந்தாய், பிரம்மத்வேஷிகளை அழிக்க முற்படுகிறாயா? துஷ்டப் பாம்புகளை அடக்குகிறாயா? தர்ம மார்க்கத்திலிருந்து பிறழ்ந்து அதர்ம வழியில் செல்பவர்களைத் தடுக்கிறாயா? பெரியோர்களின் வார்த்தைகளை மதிக்கின்றனையா? பெற்ற தாய்க்குப் பணிபுரிகின்றனையா"? எனப் பற்பல கேள்விகளை கருடனிடம் கேட்கிறார். (செய் — 129)

கருடனும் பிள்ளைகளின் காரியங்களைப் பார்த்து பெற்றோர்கள் கவலை கொள்வது இயற்கை. நீங்கள் என்னிடம் கேட்ட கேள்விகளிலிருந்து நீங்கள் என்னிடமிருந்து என்ன எதிர்பார்க்கிறீர்கள் எனத் தெரிந்து கொண்டேன். (செய் — 130)

ஆயினும் பசுக்கள், அக்னி, தேவர்கள், புனிதமான தீர்த்தங்கள் இவையெல்லாம் ஒன்று சேர்ந்து இருந்தால் எவ்வளவு புனிதத்தன்மையோ அவ்வளவு பவித்திரத் தன்மையை, என்னிடம் குற்றமிருந்தால் களைந்து. உண்டாக்குங்கள், என்று வேண்டிக்கொள்கிறான். (செய் — 131)

மறுபடியும் கஸ்யபரின் கால்களில் விழுந்து பாததூளிகளை சிரமேற்கொண்டு நமஸ்கரிக்கின்றான். தான் செய்யப்போகும் காரியங்கள் நிறைவேறவேண்டும் என்று அனுக்ரஹம் செய்யும்படி பிரார்த்திக்கிறான்.

அது போழ்து சிடர்கள் கஸ்யபர் ஏற்கனவே வெற்றி தான் கிட்டும் என ஆசிர்வதித்துவிட்டார். அவ்வாறே ஆகுக என நாங்களும் தெரிவிக்கின்றோம் என்றனர். (செய் — 132)

அச்சமயம் துக்கத்தால் பேச முடியாத கஸ்யபர், இவன் பால் மணம் மாறாதவன். இவன் தேவர்களை வென்று, அமிருதம் கொண்டுவருவான் என்பது பிரம்மாவின் வாக்கு. ஆயினும் தந்தையாகிய எனக்கு இவன் சிறுவன்தானே என்ற உணர்வு மனதில் நிற்கிறது என்கிறார்.

மற்ற முனிவர்கள், சுப்ரதீகன், விபாவசு[1] இவர்களின் விருத்தாந்தத்தை நினைவூட்டுகின்றனர். உடனே கஸ்யபர் மானஸாரண்யத்தில் வசிக்கும் முனிவர்களின் தவத்திற்கு இடையூறு விளைவித்துவரும் இந்த யானையையும், ஆமையையும் துவம்சம் செய்வாயாக என கருடனுக்கு, முனிவர்களின் எண்ணத்தைத் தெரிவிக்கிறார். சண்டையிட்டுக் கொண்டு முனிவர்களின் தவத்திற்கு இடையூறு விளைவித்துவரும் அவ்விரண்டு பிராணிகளின் திமிரை அடக்க வேண்டும் என்று கூறுகிறார். (செய். 135) போகும் வழியில் தனக்கு நல்ல உணவு கிடைத்தது என நினைந்து மகிழ்ந்து, கட்டாயம் முனிவர்களின் ஆசையை நிறைவேற்றுவதாகக் கூறுகிறான்.

கஸ்யபர், ருக், யஜுஸ், ஸாம, அதர்வண வேதங்களில் எந்த ரகசியம் சொல்லப்பட்டுள்ளதோ, அந்த ஆசிகள் உனக்கு வெற்றியையளிக்கட்டும். (செய். 136)

முப்புரத்தை எரிக்க, பூமி முதலிய தேர்வகைகளுடன் சென்றும், அவைகளை உபயோகிக்காமல் வெற்றிகண்ட பரமேஸ்வரன் உன்னைக் காக்கட்டும்; அவன் உன் அருகிலேயே இருக்கட்டும் என ஆசிர்வதிக்கிறார். (செய் — 137)

ஏனைய முனிவர்களும் இதனைக்கேட்டு தேவாசுரர்களின் குருவான கஸ்யபரின் ஆசிகள் சந்தேகமற நற்பலனை அளிக்கும் என வழிமொழிகின்றனர். (செய் — 138)

---

1. Puranic Encyclopaedia MBD, 1975, PP 218,766,846.
விபாவசு என்ற முனிவர் தன் சகோதரன் சுப்ரதீகனை, யானையாகப் பிறக்கக் கடவது என பகையால் சாபமிட, சுப்ரதீகனும் மாறாக தன் சகோதரன் ஆமையாகப் பிறக்க என பதில் சாபமிட, இருவரும் அவ்வாறே பிறந்தபின், கருடன் அமிருத கலசத்தைப் பெறச் செல்லும் வழியில், இவர்கள் சண்டையைக் கண்ணுற்று, தன் தகப்பனார் வார்த்தைக்கேற்ப, அவர்களை அழித்து விடுகிறான்.

சருடன் தன் தந்தையின் மகிமையை அறிந்து பெரு மகிழ்ச்சியடைகிறான். (செய் — 139)

முனிவர்கள், எல்லா எண்ணங்களும் நிறைவேறுவதற்குரிய "சந்நாதி" என்ற ஆசியை அளிக்கின்றனர் வாமனாவதாரத்தின் பிரபாவத்தை வர்ணித்து ஆசீர்வாதம் செய்கின்றனர். (செய் — 140)

குளுமையும் அமைதியும் கொண்ட சூழ்நிலையை யுடைய மானசாரண்ய திவ்ய தீர்த்தத்தில் (மிருகங்களின் அட்டகாசத்தை ஒழித்து) சாந்தியை ஏற்படுத்துவாயாக என கருடனுக்கு விடையளிக்கின்றனர். (செய் — 141)

142வது செய்யுளிலும் கவி மானஸாரண்யத்தின் அமைதியான சூழ்நிலையை மேலும் விவரிக்கிறார்.* கஸ்யபருடைய சிஷ்யர்களான சிறுவர்களும் தன் அண்ணாவான கருடனைக் கட்டிக்கொண்டு கண்ணீர்மல்க விடை கொடுக்கின்றனர். கருடனும் அவர்களின் விருப்பத்தைப் பாராட்டி தந்தையைக் கவனித்துக் கொள்ளுங்கள் எனக் கூறிவிட்டு விடை பெறுகிறான். ஸம்ப தீர்த்தத்தில் ஆலமாரக் கிளையில் சூரிய கிரணத்தை உணவாய் உட்கொண்டு தவம்

---

* 142-வது செய்யுளின் நேர்த்தியைக் காண்க !

ஆ கங்கா ஸிந்து கங்காதடீ தவளமகங்காமலங்காஹமானா
ஸங்கா துன்முக்த ஸங்காத் ஸபதி விரசாந்த்யாபதங்காத்
ப்ரஸங்காத் ।
ஸ்ருங்கான் மேரேரனங்காந்தகசிரஸி பதன்த்யாத்த ச்ருங்கா
சரண்யா
கங்காரிங்கத்தரங்காவலிரலது ஸதா Zபீஷ்ட பங்கா பிஷங்காத் ।

புரியும் வாலகில்யர்கள்* என்ற முனிவர்களை வணங்கிச் செல்வாயாக என கஸ்யபர் கருடனுக்கு உத்தரவிடுகிறார். கருடன் அவ்வாறே செய்கிறேன் எனக் கூறி, மேலெழும்பி புறப்பட முனைகிறான். (செய் — 143)

கருடனும் தந்தை கஸ்யபரை வணங்கிவிட்டுத் தனது இரு இறக்கைகளையும் விரித்து வேகமாகச் செல்ல முற்படுகிறான். கருடன் பறந்து செல்லும் வர்ணனை செய். 144-ல் நன்றாக விவரிக்கப்பட்டுள்ளது. கருடன் வேகமாகச் செல்வதால் பூமி முழுவதையுமே அணைத்துச் செல்வது போல் தோன்றுகிறது. சீக்கிரமாகவே மானஸரோவரம் என்ற இடத்தை அடைகிறான். செய்யுட்கள் 145, 146ம் மானஸ ஏரியின் வர்ணனையைச் சித்தரிக்கின்றன. மகாமேருவிலிருந்து பெருகும் அருவிகளால் தண்ணீர் நிரப்பியுள்ளதும், ரத்னங்களாலும், தங்கத்தாலும் இழைக்கப்பட்ட சுற்றுப்புறத்திலுள்ள பிரதேசங்களையுடையதும், எக்காலத்திலும் பூக்கும் மலர்கள், காய்கள், கனிகள் உள்ள மரங்களால் சூழப்பட்டதாயும், காண்போரின் மனதையும் கண்களையும் கவரும் நேர்த்தி வாய்ந்ததாயும் உள்ள மானஸம் என்ற நீர்நிலைப் பிரதேசத்தை ஆகாய மார்க்கத்திலிருந்தவாறே கருடன் பார்க்கிறான்.

---

* Puranic Ency. MBD. 1975, P 101. சப்தரிஷிகளுள் ஒருவரான க்ரது என்ற மகரிஷிக்கு 60000 புத்திரர்கள் பிறந்தனர் வாலகில்யர்கள் எனவும் இவர்கள் அழைக்கப்படுகின்றனர். கட்டைவிரலில் பாதி பருமனுள்ள ஒவ்வொருவரும் பிரகாசமாக ஜொலித்தனர். கஸ்யபர் யாகம் செய்யும்போது இந்திரனால் அவமதிக்கப்பட்ட வாலகில்யர்கள், இந்திரனை வெல்லும் சக்தி படைத்த குமாரன் கஸ்யபருக்குப் பிறக்க அருளினர். அவ்வாறே கஸ்யபருக்கு கருடன் பிறந்து இந்திரனை வென்றான். மகாபாரதத்தில் (ch. 141) அநுசாஸன பர்வத்தில் இவர்கள் வாழ்க்கை முறையும், விஷ்ணுபுராணத்தில் (ch. 10, அம்ஸம் 1) இவர்கள் புலனடக்க விபரங்களும் விஸ்தரிக்கப்பட்டுள்ளன.

மேலும் பாலையும் தண்ணீரையும் பிரிக்கும் (சக்தி படைத்த) அன்னப் பறவைகள் (ராஜஹம்ஸங்கள்) அந்நீர் நிலையில் நீந்தி விளையாடிக்கொண்டிருக்கின்றன. அங்கு யானையும் ஆமையும் ஒன்றுக்கொன்று சண்டையிட்டுக் கொண்டிருப்பதையும் பார்க்கிறான்.

தண்ணீரில் இருக்கும்போழ்து ஆமைக்கு பலம் அதிகம்; அதேபோல் தரையில் இருக்கும்போழ்து யானைக்கு பலம் அதிகம். யானை தன் வாலை முறுக்கிக்கொண்டு தன் துதிக்கையால் பூமியை அடித்துக்கொண்டு கால்கள் நடுமாற, அந்த ஆமையைத் தண்ணீரைவிட்டு நிலத்திற்கு இழுக்கப்பார்க்கிறது! ஆமையோ தண்ணீரை வாரி இறைத்துக்கொண்டு தன் கோரப் பற்களைக் காட்டிக் கொண்டு, கழுத்தைத் தூக்கிக்கொண்டு யானையை நீரில் இழுக்கப் பார்க்கிறது. (செய். 147) இவ்வாறு ஆமையும் யானையும் கடும் சண்டையில் ஈடுபட்டுக் கொண்டிருக்கின்றன! இதனால் அங்குள்ள தவசிகளுக்கு அமைதி குலைவதை கருடன் தெரிந்துகொள்கிறான். இக் கருத்துக்கள் செய். 148, 149, 150, 151 இவைகளில் கொடுக்கப்பட்டுள்ளன.

அவ்வமைதியான சூழ்நிலையில் கின்னரர்கள், அப்ஸரஸ் ஸ்திரீகள் முதலியோர் அம்மானஸ நீர்நிலையில் வந்து நீராடுதலையும், மற்றொரு பகுதியில் தவசிகள் தவத்தி லாழ்ந்திருப்பதையும் கருடன் பார்க்கிறான். கஸ்யபர் கூறியவாறு, தவம் புரியும் முனிவர்களுக்கு ஏற்படும் இடையூறுகளைக் களைய எண்ணம் கொள்கிறான்.

அப்பிரதேசத்திலிருந்து யானையையும் ஆமையையும் தன் இருபாதங்களின் கூரிய நகங்களால் தூக்கிக்கொண்டு, கருடன் உயரே கிளம்புகிறான். யானையும் ஆமையும் கருடனின் இருகால் நகங்களுக்குக் கீழே தொங்குகின்றன. அவை இறந்தவுடன் மகாமேருவின் சிகரத்தில் வைத்துவிட வேண்டும் என்ற எண்ணத்துடன், அவ்விடத்தை அடைகிறான்.

மந்தாகினி எனும் கங்கைக் கரையில் கல்ப விருக்ஷங்கள் தென்படுகின்றன. அவை நினைத்ததையெல்லாம் அளிக்கும் வல்லமையுடையனவாக இருக்கின்றன. யானையையும் ஆமையையும் தள்ள வேண்டிய இடத்தைத் தேடுகிறான். மலையில் நெடிய பெரிய மரங்கள் கிளைகளோடு அவன் கண்ணில் தென்படுகின்றன. அவைகளில் ஒரு பெரிய ஆலமரம் வியாபித்திருப்பதைப் பார்த்து, அவ்விடத்தில் இவையிரண்டினையும் இறக்கிவிடலாமா என எண்ணி வட்டமிடுகிறான். (செய் 152, 153, 154, 155)

அதுபோழ்து ஒரு கிளை முறியும் சப்தம் கேட்கிறது. மேலே உன்னிப்பாகக் கவனிக்கிறான். அக்கிளையில்தான் தனது தந்தை கூறியபடி கட்டைவிரல் பருமனுள்ள "வாலகில்யர்கள்' என்ற முனிவர்கள் சூரியகிரணங்களை உணவாகக்கொண்டு தவம் புரிந்துகொண்டிருக்கின்றனர். முறிந்துகொண்டிருக்கும் அக்கிளை கீழே விழுந்தால் முனிவர்கட்கு ஆபத்து உண்டாகும். அவர்கள் தவமும் கெடும் என்று எண்ணி அவர்களுக்கு எந்த ஆபத்தும் ஏற்படாத வகையில் அந்தக் கிளையைத் தன் அலகினால் கொத்தி தூக்கிக்கொள்கிறான் கருடன். இவ்வாறு அலகினால் மாபெரும் கிளையும், கால்களால் ஆமையும், யானையும் தூக்கப்பட்டுச் சென்றுகொண்டிருப்பதை கண்ணுற்றவர்கள் ஆச்சரியமடைகிறார்கள்; இதனால் பூமியினாலோ, கடல்களாலோ கருடனுக்கு என்ன இடையூறு செய்ய முடியும் என்றும் நினைத்து ஆச்சரியப்படுகிறார்கள்! (செய். 156) ஆயினும் ஜன சஞ்சாரமற்ற எந்த இடத்தில் இவர்களை இறக்கலாமென நினைத்து எல்லா இடங்களையும் மண்டலாகாரமாகச் சுற்றிக்கொண்டிருக்கிறான்.

(செய். 157)

இலங்கைக்கு அருகிலோ, நிஷதம் அல்லது ஸஹ்யம் அல்லது விந்திய மலைத்தொடர் இவைகளில் ஒன்றிலோ, அல்லது சமுத்திரக்கரையிலோ, எங்கு இறக்கினால் வாலகில்யர்களின் தவம் கெடாமலும் அவர்களுக்கு ஆபத்தில்லாமலும் இருக்கும் என்றெண்ணி அக்கிளையிலுள்ள

முனிவர்களைக் கவனிக்கிறான். (செய். 158, 159) அக் கிளையை ஆடாமல் அசையாமல் கொண்டுவந்ததால் அவர்கள் எவ்வித இடையூறுமின்றி தவத்திலேயே ஈடுபட்டுள்ளனர். ஆனால் அவர்களுக்கு தான் எந்தவித குற்றமும் இழைக்கவில்லை என கருடன் திருப்தியடைகிறான்! ஆனதால் அவர்களை வணங்குகிறான். கஸ்யபர் கூறியபடி இவர்களை எங்கு இறக்குவது என்று ஒன்றும் புரியாமல் தர்மசங்கடத்திலுள்ளேனே என ஏக்கம் கொண்டு, தந்தையையே கேட்டுவிடுவது என நிச்சயிக்கிறான். என்ன நடக்கப்போகிறதோ எனத் தத்தளிக்கிறான். (160, 161)

கண்ணாடியில் பிரதிபிம்பத்தைப் பார்ப்பது போல் முக்கால விஷயங்களையும் (நடந்தது, நடப்பது, நடக்கப் போவது) உள்ளங்கை நெல்லிக்கனி போல், தவம் புரியும் முனிவர்கள் அறிவார்கள் அல்லவா? என்று நினைத்துக் கொண்டு கீழ் நோக்கிப்பார்க்கிறான். (செய். 162)

சூரியன் வானத்தின் உச்சியில் இருக்கிறான். தந்தை இச்சமயம் மாத்யான்னிக காரியங்களைச் செய்ய கங்கைக்கு வருவார் என எண்ணி, கீழே நோக்கும்போது, அவ்வெண்ணத்திற்கேற்ப, தர்ப்பாணிந்து, ருக், யஜுஸ், ஸாம, அதர்வ மந்திரங்களை உச்சரித்துக்கொண்டு, கஸ்யபர் சூரிய நமஸ்காரம் செய்துகொண்டிருக்கிறார்! இந்த பிரம்ம சங்கடத்தைத் தீர்க்க என பரிகாரம் என வினவுகிறார். (செய். 163)

அப்பொழுது கஸ்யபர் வாலகில்யர்களை நினைத்துச் சொல்கிறார். முனிஸ்ரேஷ்டர்களே, கருடன் உலக க்ஷேமத்திற்காக ஓர் காரியத்தில் ஈடுபட்டுள்ளான். உங்கள் தவமும் கெடக்கூடாது. கருடன் காரியமும் பலிதமடையவேண்டும். இரண்டும் நல்ல காரியங்கள். ஆகவே நீங்கள் உங்கள் தியானம் கலைந்து மதிய காரியங்களில் இறங்குங்கள், என்று பிரார்த்திக்கிறார். வாலகில்யர்களும் தியானம் கலைந்து மதிய காரியங்களுக்காக, கருடன்

பற்றியிருக்கும் கிளையிலிருந்து கிளம்புகின்றனர் ! இதைக் கண்ணுற்ற கருடன் ஆச்சரியப்படுகிறான் !

கஸ்யபருர், அம்முனிவர்கட்கு, யோகத்தின் மூலமாக அக்ஞானம் நீங்கி, அதற்கப்பாற்பட்ட ஔபநிஷத சின்மய மான ஆத்ம ஸ்வரூபம் தென்படட்டும் என ஆசிர்வதிக் கிறார். கருடனும் அதைக்கேட்டு அகமகிழ்ந்து, பரமன் அருள் கிடைக்கவேண்டும் என எண்ணி, ஆதிசேஷன் சொல்லியனுப்பியதையும் நினைவுபடுத்திக்கொள்கிறான். இவ்விவரங்கள் (செய்யுட்கள் 164, 165, 166, 167) இவற்றில் கொடுக்கப்படுகின்றன. செய். 167 நேர்த்தியாக அமைக் கப்பட்டிருக்கிறது !

யானையையும் ஆமையையும் எந்த இடத்தில் இறக்கி விடவேண்டும் என்று கஸ்யபர் சொல்கிறார். அவைகளை சுவேல மலையிலோ, பனிபடலத்திலே விட்டுவிட்டு, நீ எந்தக் காரியத்திற்காகப் புறப்பட்டாயோ அக் காரியத்தை வெற்றிகரமாக முடிப்பாயாக என கஸ்யபர் கருடனிடம் கூறுகிறார். (செய். 168, 169)

அவர் வார்த்தையைக் கேட்டு கருடன் அவ்வாறே அந்த யானை, ஆமை இரண்டினையும் யாரும் அணுகாத அவ் விடத்தில் விட்டுவிட்டு, அமிர்தத்தை அடையும் எண்ணத் துடன், மகாவிஷ்ணுவிடம் செல்கிறான். (செய். 170)

அப்போது வானவெளியில் ஒரே விமானத்தில் இரு தெய்வீக புருஷர்கள் தோன்றுகிறார்கள் அவர்கள் கருடனுக்குக் கீழ்க்கண்ட வாறு ஆசிகளைக் கூறுகின்றனர்

''கருடா ! இந்த யானையும் ஆமையும் முன்பிறவியில் விபாவசு, சுப்ரதீகன் * என்ற இரு ரிஷி குமாரர்களாக

* 1. மகாபாரதத்தில் ஆதிபர்வத்தில், 29, 30 பிரிவுகளில் விபாவசு, சுப்ரதீகன் விவரம் கூறப்படுகிறது.

2. மோதிலால் பனார்ஸிதாஸ் பதிப்பு (1975) புராணக் களஞ்சியத்திலும் (Puranic Encyclopaedia) பக்கங்கள் 281, 282ல் விவரம் காணலாம்.

இருந்தனர். இருவரும் நெருங்கிய நண்பர்களாகயிருந்தனர். அவர்களுக்குள் ஏற்பட்ட மனஸ்தாபத்தினால் ஒருவன் யானையாகப் பிறக்க என்றும் மற்றவன் ஆமையாகப் பிறக்க எனவும் சாபமிட்டுக்கொண்டனர். அவர்கள் தற்போது யானையாகவும், ஆமையாகவும் பிறந்து, கருடனால் சாபவிமோசனமடைந்தனர்'' எனக் கூறுகிறார். (செய். 171)

கருடன் இந்த விவரத்தைக்கேட்டு, முனிகுமாரர்கள் சாப விமோசனமடைந்தது குறித்து மகிழ்ந்து தேவபுருஷர்களை வணங்குகிறான். ''அக்னியும், விஷ்ணுவும் உனக்கு சண்டையின்போது பலத்தை அளிக்கட்டும், பிரம்ம க்ஷத்திரியர்கள் உன் இறக்கைகளுக்கு பலம், தேஜஸ் இவைகளை அளிக்கட்டும்.'' என அவர்கள் கருடனை ஆசிர்வதிக்கின்றனர். சந்திரனைப்போன்றும், வருணனைப் போன்றும் கருடனுக்கு சக்தி ஏற்படட்டும் என்று ஒரு தேவன் ஆசி கூறுகின்றான். (செய். 172)

மற்றொரு தேவபுருஷன் சுப்ரமணியக் கடவுளும், கணேசனும், பரமசிவனுடைய இல்லாமையைக் குறித்துப் பேசிக்கொண்டிருப்பதை தோழியர் சொல்ல, அதைக்கேட்ட பார்வதி பரமேஸ்வரர்கள் சிரித்து மகிழ்வதையும் வர்ணித்து அவர்கள் உன் பக்கம் இருந்து நன்மையைச் செய்யட்டும் என்று கருடனை வாழ்த்துகிறார். (செய் 173) கருடன் அவர்கள் இருவருடைய ஆசிகளையும் பெற்றுக்கொண்டு நன்றி கூறிய பின் அந்த இரு தேவ புருஷர்களும் விடை பெற்றுச் சென்றுவிடுகின்றனர்.

வானமண்டலத்தில் சஞ்சரித்துக்கொண்டே இருக்கும் கருடனோ மகாமேரு சிகரத்தினருகில் வருகிறான். ஆதி ஆமையை (கூர்மாவதாரம்) ஆதாரமாகக் கொண்டு, மந்தரமலையை மத்தாகவும், வாசுகி (என்ற பாம்பை)யைக் கயிறாகவும் வைத்து (பாற்)கடலைக் கடைந்து தேவ, அசுரர்கள் அமிருதத்தைக் கொண்டு வந்தனர். மேருவின்

சிகரத்தில் எங்கோ பாதுகாப்பான ஒரு ரகசியமான இடத்தில் (அமிருதத்தை) வைத்துள்ளனர். அதன் அருகில் நான் வந்துவிட்டேன் என கருடன் மகிழ்ச்சியடைகிறான். (செய். 174)

எதிரில் கந்தர்வர்கள் முன் நிற்க, தேவர்களின் படை அமிருதத்தைக் காத்துக்கொண்டிருக்கிறது. அது என்னுடன் சண்டை செய்வதற்கும் தயார் நிலையில் உள்ளது. நான் எந்த ஒரு எதிர்ப்பு வந்தாலும், சமாளிக்கத் தயாராயிருக்கிறேன் என்று சொல்லி கருடன் அரங்கத்தினைவிட்டு அகலுகிறான். (செய். 175)

வஸுபூதியும், நாரதரும் வானமார்க்கத்தில் விமானத்தில் அரங்கில் தோன்றுகின்றனர். நாரதர் வசுபூதியிடம் அங்குள்ள நிலையை (அவசரநிலை, யுத்தநிலை) வர்ணிக்கிறார். பல செய்யுட்களில் வரும் இவ்வர்ணனை நேரில் பார்ப்பதுபோல் நாடக அமைப்பில் நேர்த்தியை எடுத்துக் காட்டுகிறது. (செய்யுட்கள் 176 முதல் 199 வரை)

கந்தர்வராஜ நண்பா! பார்! பார்! பெரும் ஆபத்து வரும் என பிருஹஸ்பதி தெரிவிக்க, சண்டைக்கு ஆயத்தமான நிலையில் தேவர்களின் படை நிற்கிறது! நான் முன்பே சொல்லி உஷார்படுத்தப்பட்ட இந்திரனும் சண்டைக்குத் தயாராக இருக்கிறான். தேவர்களின் படை முன்னணியில் நிற்கிறது. யுத்தம் ஆரம்பமாகிவிட்டது என்பதற்கறிகுறியாக பேரிகள் முழங்குகின்றன. (செய். 176)

வஸுபூதி: நாரதரே! இன்று உமக்கு நல்ல வேட்டை கிடைத்திருக்கிறது! பாருங்கள். தேவர்களின் படை கருடனைச் சூழ்கிறது! யாகத்தில் போடப்பட்ட சமித்தும், நெய்யும் இவைகளால் கொழுந்துவிட்டெரியும் நெருப்பு போல் பேரி சப்தங்களைக் கேட்டு கோபமடைந்த கருடன், பௌமனனின் படைமீது பாய்கிறான். (செய். 177)

நாரதர் வஸுபூதியிடம் சொல்கிறார். பாம்புகளால் கட்டப்பட்டு, குதிரைகளால் பூட்டப்பட்ட இந்திரனின் தேர் அந்த கோபுர வாசலில் தென்படுகிறது பார்! ரதத்தின் குதிரைகளைப் பார். கனைத்துக்கொண்டு இந்திரனின் கண்கள் போல் நூற்றுக்கணக்கான குதிரைகள் தேரை இழுத்துச்செல்கின்றன பார். (178, 179, 180)

வஸுபூதி சொல்கிறான்: தேவரிஷி அவர்களே! கருடன் மிக ஆவேசத்துடன் பிரளயகால நெருப்புப்போல் பிரகாசித்துக்கொண்டு தனது அலகினாலும், கூரிய நகங்களாலும், எதிரிகளை அழிப்பதைப் பாருங்கள். (செய். 181)

நாரதர் அதுசமயம் ஏதோ கலவரம் அங்கு ஏற்படுகிறதே என உன்னிப்பாகக் கவனித்து, நினைவுபடுத்திக் கொண்டு கூறுகிறார். இதோ பார்! இந்திரனும் ரதத்தில் ஏறிக்கொண்டு பௌமனனின் தலைமைக்குதவியாக தேவர்களின் படைக்கு வந்துவிட்டான்! தங்கமயமான கிண்கிணிகளாலும், நேர்த்தியான துவஜத்தாலும் தேர் அலங்கரிக்கப்பட்டுள்ளது! புதுபுது அஸ்திரங்கள் தென்படுகின்றனவே! (செய். 182, 183)

மேலும் வசு ருத்ர ஆதித்யர்களும் தேர்களில் அமர்ந்துகொண்டு இந்திரனுக்கு உதவி புரிய வந்துவிட்டனர்! இந்திரனின் தேரோட்டி மாதலி எவ்வளவு நேர்த்தியாகத் தேரோட்டுகிறான் பார்! அவன் தேரோட்டும் சாதுர்யம்தான் என்னே! அந்த குதிரைகளும் (தன் எஜமானன்) குறிப்பை அறிந்துகொண்டு, வாயில் நுரையைக் கக்கிக்கொண்டு, ஏனைய குதிரைகளைப் பரிகசிப்பதுபோல் அங்குமிங்குப் ரதத்தை இழுத்துச் செல்கின்றன. விமானங்களையும் தாண்டிச் செல்கின்றன!
(செய். 185)

வஸுபூதி மேலும் கூறுகிறான்:- நாரத முனிவரே! கருடன் தனது பலம் பொருந்திய அலகாலும், இறக்கை

களாலும், கூரியநகங்களாலும், தேவர்களுடைய படைவீரர்களுடன் கடுமையாகச் சண்டை செய்து, தேவேந்திரன் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே பௌமனை துண்டு துண்டாகச் செய்து, அவன் தலையினைத் தூக்கி எறிகிறான் பாருங்கள். (செய். 186)

நாரதர் வினதாவின் புத்திரனான கருடனின் பராக்ரமத்தை வெகுவாகப் புகழ்கிறார். முன்பு கருடன் முட்டையிலிருந்து வெடித்து வெளிவந்தபோதே அண்ட சராசரங்களை கிடுகிடென நடுங்க வைத்தான். இப்பொழுது கருடன் தேவர்களுடன் ஆக்ரோஷத்துடனும் ஆரவாரத்துடனும் சண்டை செய்து நடுக்கம் ஏற்படுத்துவதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை என்று எண்ணி பழைய சம்பவத்தை நாரதர் நினைவு கூர்கிறார். (செய் 187)

நாரதரும் வஸுபூதியும் வானவெளியில் இருந்து கொண்டு தேவர்களின் சேனைக்கும், தனியாக இருக்கும் கருடனுக்கும் நடக்கும் கோரமான சண்டையினைப் பற்றி விவரமாகப் பேசிக்கொள்கின்றனர். யுத்த வர்ணனையை மாறி மாறிப் பேசிக்கொள்கின்றனர். சண்டைக் காட்சிகளை அரங்கில் காண்பித்தல் கூடாது என்ற விதிமுறைக்கேற்ப, நாடகாசிரியர், நாரதர் வஸுபூதி சம்பாஷணை மூலம் யுக்தியைக் கையாண்டு, நாடக சம்பவங்களுக்கு விறுவிறுப்பூட்டும் வகையில் சம்பவங்களை வியக்கும் வண்ணம் வர்ணிக்கிறார் !

நாரதரும் வஸுபூதியும் வர்ணனையைத் தொடர்ந்து பேசி, கருடன் மிக ஆக்ரோஷத்துடன் தேவர் படைகளின் மீது பாய்ந்து தனது பலமான அலகினால் துகள் துகளாகக் கொத்தித் தூக்கி எறிந்துகொண்டிருப்பதைக் கண்ணுறுகின்றனர். தேவர்களின் படைவீரர்கள், கவசங்களுடன் அதிகமான அஸ்திரங்களைப் பயன்படுத்தி, கடுமையாக எதிர்க்கின்றனர் ! (செய். 188)

கருடன் ஒருவனாகவே சண்டையில் தேவர்களின் படைகள் மீது மோதுகிறான் ! குழந்தைப்பருவம் ! கையில் எந்தவித அஸ்திரமும் இல்லை. இந்த சூழ்நிலையில் சண்டையில் எதிரிகளை ஓடும்படி விரட்டுகிறான் என்றால் ஆச்சரியப்படவேண்டிய விஷயமல்லவா ! கருடனின் இறக்கைகளின் வேகத்தால் ஆகாயமே புழுதிப்படலங்களால் சூழப்படுகிறது ! ஒருவர் கண்களுக்கு மற்றவர் தெரியாத நிலையில் சண்டை செய்ய முடியாமல் கண்களை மூடிக்கொண்டு நிற்கின்றனர் ! உடனே இந்திரனுடைய ஆணையால் வாயு பகவானால் புழுதிப்படலம் நீக்கப்படுகிறது ! தேவர் சேனாவீரர்கள் மழை வர்ஷிப்பது போல் பாணங்களால் கருடனை அடிக்கின்றனர். கருடனோ, தனது இறக்கைகளைப் பிரித்து வீசுவதினாலும், அலகினாலும், கால் நகங்களாலும் பாணங்களைத் தடுத்துவிடுகிறான் ! எதிரிகளை துரத்தி துரத்தி விரட்டுகிறான் ! வசு, ருத்ர, ஆதித்யர்கள் எந்த திசைக்கு ஓடுவது என்று புரியாமல் திக்குமுக்காடி ஓடுகின்றனர். இந்த கோரமான காட்சியினை, கவிஞர். நாரத, வஸுபூதி சம்பாஷணை மூலம் (செய்யுட்கள் 189, 190, 191, 192, 193 முதலியவற்றில்) மிக நேர்த்தியாக விளக்குகிறார் !

இவ்வாறு படைகளின் சண்டை ஒருவாறு ஓய்வடையவே, கருடன் அமிருத கலசம் பாதுகாப்பாக வைக்கப்பட்டிருக்கும் இடத்திற்குச் செல்ல முற்படுகிறான். அஸ்வச்சேதி முதலிய பன்னிரெண்டு தற்கொலைப் படைவீரர்களால்* அவ்விடம் காக்கப்பட்டு வருகிறது. (செய். 194) ஆனால் என்ன ஆச்சரியம் ! கருடனை எதிர்க்க வேண்டிய காவற்படை வீரர்கள், எதிர்ப்பதற்குப் பதிலாக வழிவிட்டு விட்டனர் ! கருடன் அமிருத கலசம் இருக்கும் இடம் நோக்கி செல்கிறான் !

---

* தற்கொலைப் படைவீரர்கள் உயிரைத் தியாகம் செய்வார்களே ஒழிய, சண்டையில்/பாதுகாப்பில் பின்வாங்க மாட்டார்கள்.

அமிருத கலசத்தைச் சுற்றி நான்கு புறமும் எரிந்து கொண்டிருக்கும் அக்னியைப் பார்க்கிறான்! பிரளய கால நெருப்புப் போல் சுற்றிச் சுற்றி நான்கு புறமும் எரிந்து கொண்டிருக்கும் இக் கொடூரமான அக்னியை கருடன் எவ்வாறு சமாளிக்கப் போகிறான் என்று நாரதரும் வஸுபூதியும் ஆவலுடன் பார்த்துக்கொண்டிருக்கின்றனர். (செய். 195)

அவர்களிருவரும் மாறி மாறி ஆவலுடன் பேசிக் கொள்கின்றனர். கவலையும் கொள்கின்றனர்! அக்னியைக் கண்ட கருடன் சென்று விடுவானோ? சண்டையை நிறுத்தி விடுவானோ? பாவம் தாக்ஷாயணி இவனால் ஏமாற்றப்படுவாளோ? அடிமைத்தனம் நீங்காமல் தொடர்ந்து கஷ்டப்படுவாளோ? என்றெல்லாம் பல சந்தேகங்கள் அவர்கள் மனதில் எழுகின்றன.

ஆனால் கருடன் தனது தொண்ணூற்றொம்பது முகங்களால் அந்த அக்னியை விழுங்கி அணைத்துவிடுகிறான்! நாரதரும் வஸுபூதியும் வியப்பில் மூழ்குகின்றனர். பாராட்டுகிறார்கள். (செய். 196)

நாரதர் வெகுவாகப் புகழ்கிறார். இந்திரன் கண்ணீருடன் தன் ஆயிரம் கண்களால் இக்காட்சியைக் காணட்டும்! ஆதிசேஷன் தனது ஆயிரம் தலையிலுள்ள இரண்டாயிரம் கண்களால் கோபத்தோடு இதைக் கவனிக்கட்டும்! கொள்ளுத் தாத்தாவாகிய பிரம்மா தன் எட்டுக் கண்களால் இக் காட்சியைக் காணட்டும்! தமையன் அருணன் தன் சகோதரன் செய்யும் இக் காரியத்தைக் கவனிக்கட்டும்! (செய். 197)

நாடக ஆசிரியர் வஸுபூதி நாரதர் சம்பாஷணையை ஆவலைத் தூண்டும் வகையில் விறுவிறுப்புடன் அமைத்திருக்கிறார். ஓர் இயந்திரம் அங்கு சுற்றிக்கொண்டே

யிருக்கிறது விஷத்தைக் கக்கும் பாம்புகள் அருகில் யாராவது வந்தால் கடிப்பதற்கு தயாராயுள்ளன இந்த கஷ்டத்தை கருடன் எவ்வாறு சமாளிக்கப்போகிறான். என்று மேலும் ஆவலுடன் வியப்படைகிறார்கள்.

(செய். 198)

வஸுபூதி நாரதரை ஆச்சரியத்துடன் கூப்பிட்டு, பாரும் நாரதரே விநதாவின் புத்திரனான வைனதேயன், சூக்ஷ்ம சரீரமெடுத்து தன் தவத்தின் மகிமையால் அஷ்டமா சித்தியைப் பெற்று, மிகச்சிறிய வடிவங்கொண்டு இயந்திரத்தைத் தாண்டிச் செல்கிறான் என்று காண்பிக்கிறான். (செய். 199) புழுதியை வாரி இறைத்து அக்கொடிய பாம்புகளின் கண்களை குருடாக்குகிறான். நாரதர் கைதட்டி கருடனின் பராக்ரமச் செயலை பாராட்டுகிறார். (செய். 200)

இவ்வாறு பல இன்னல்களைக் கடந்து, திறமையாகவும், சாதுர்யமாகவும் அமிருத கலசம் இருக்கும் இடத்தை அடைந்த அக்கருடனைப் பாராட்ட பூமழை பொழிகிறது என வஸுபூதி தெரிவிக்கிறான். அமிருதத்தை எடுத்துச் செல்ல வந்த கருடனை கோபம் கொண்ட தேவர்கள் சேனைவீரர்கள் பாணங்களால் தலையில் அடிக்கின்றனர். அஹோ! அவை கல்ப விருக்ஷங்களாக மாறி நறுமணமுள்ள பூக்களாக கருடன் சிரஸில் விழுகின்றன என்று இலக்கிய நயமுள்ள செய். 201ல் வர்ணிக்கப்படுகிறது.

நாரதர் கூறுகிறார் :- இந்த அமிருதத்தை அருந்த தேவர்களும் அசுரர்களும் சண்டையிட்டுக்கொண்டிருந்த பொழுது, விஷ்ணு மோகினி வடிவம் கொண்டு அசுரர்களை வஞ்சித்து, தேவர்களுக்கு மட்டும் அமிருதத்தை வழங்கினார். அப்பொழுது ஓர் அசுரன் தேவர்களின் நடுவில் அமர்ந்து அமிருதத்தை அடைந்தபொழுது, சந்திரனும்

சூரியனும் அவ்வசுரனை மோகினிக்குக் காட்டிக் கொடுத்தனர். மோகினி தன் கரண்டியால் அவன் தலையைக் கொய்துவிட்டாள்! அவர்கள்தான் ராகு, கேது என அழைக்கப்படுகின்றனர். அப்பேர்ப்பட்ட அமிருதம் கையில் கிட்டியுங்கூட, அதைக் கண்ணாலும் பார்க்காத கருடனின் வைராக்கியத்தையும் தன்மையையும் நாரதரும், ஸௌபூதியும் பாராட்டுகின்றனர் (செய். 202)

அது மாத்திரமல்ல பூமியிலுள்ள முனிவர்கள்கூட விரதம், அடக்கம், ஜபம், ஹோமம், தானம், தவம் முதலியவைகளைச் செய்து அவைகளின் முடிவில இந்த அமிருதத்தை அடைய விரும்புகின்றனர். ஆனால் இந்த கருடனோ கைக்குக் கிடைத்த அமிருதத்தில் சுயநாட்டம் கொள்ளவில்லையே என தியாக புத்தியைப் பாராட்டுகின்றனர். (செய். 203)

தனது உயிரின்மேல் கூட ஆசை வைக்காமல் தன் பெற்றோர்களின் சந்தோஷத்திற்காக இவ்வளவு இன்னல்களை மேற்கொண்ட கருடனின் தியாகத்தை மெச்சுகின்றனர். கருடன் இவ்வளவு சீலத்தைப் பெற்றிருக்கின்றானே என வியப்படைகின்றனர். (செய். 204) இவையெல்லாவற்றிற்கும் மேலாக பகவான் நாராயணனின் தரிசனம் கிடைக்கும் வாய்ப்பும் கிட்டும் என இருவரும் நம்புகிறார்கள்!

அவர்கள் நம்பிக்கை வீணாகாதது போல், ஸ்ரீமந் நாராயணனும் அங்கு நடைபெற்ற சண்டையில் திருப்தியடைந்தவர் போல் வானவெளியில் தோன்றுகிறார். நாராயணன் மார்பில் உள்ள ஸ்ரீ வத்ஸம் என்ற மச்சத்தின் மேல் கௌஸ்துப மாலை பளிச்சிடுகிறது மார்பில் லக்ஷ்மி அமர்ந்திருக்கிறாள். சூர்ய சந்திரர்கள் கண்களாக விளங்குகின்றனர் தொப்புள்கொடியிலிருந்து ஓர் தாமரை உண்டாயிருக்கிறது. தலைக்கு மேலுள்ள குடையி

லிருந்து அமிருத தாரை தெளிக்கப்படுகிறது. இக்கோலத்துடன் நாராயணன் தோற்றமளிப்பது 205, 206, செய்யுட்களில் நேர்த்தியாக விவரிக்கப்படுகின்றன. மேலும் கால் வரை துளசி மாலை தொங்குகிறது. தலைக்கிரீடத்தில் மயில் தோகை நடனமாடுகிறது. நீலமேகஸ்யாமள மேனி காட்சியளிக்கிறது. மஞ்சள் பீதாம்பர வஸ்திரம், இடையை அலங்கரிக்கிறது! தாமரைக் கண்கள், நந்தனின் வீட்டில் வளர்ந்த ஜோதி! அப்பேர்ப்பட்ட பகவான் சுமேரு மலையின் சிரத்தில் இறங்கி கருடனுக்கு தரிசனமளிக்கிறார். இதைக் கண்ணுற்ற நாரதரும், வஸுபூதியும் விமானத்திலிருந்து கீழே இறங்குகின்றனர்.

கருடன் பக்தி பரவசத்தால் மயிர்க்கூச்சல் ஏற்பட, தன் பாகுபலத்தால் பெறப்பட்ட அமிருதத்தையே காணிக்கையாக எடுத்துக்கொண்டு பகவான் நாராயணனின் பாதங்களில் சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்கரிக்கின்றான். இதையும் கண்ணுற்ற வஸுபூதியும், நாரதரும் வியப்புடன், கருடனின் பாக்கியத்தை மெச்சுகின்றனர்!

எந்த ப்ரம்மத்தைப் பார்க்கவேண்டுமென்று ஞானிகள் உபநிடதங்களில் கூறியபடி, புலன்களை அடக்கி, மாயையை அகற்றி, ஆதி அந்தம் அற்ற அப்பரம்பொருளை சத், சித், என ஆனந்த வடிவாக்கி, அப்பேரின்பத்தைப் பெற முயலுகிறார்களோ, அந்த பிரம்ம ஸ்வரூபமான நாராயணன் தானாகவே நேரில் வந்து தரிசனம் அளிக்கிறார் என்றால் கருடனின் பாக்கியம்தானே என்று எண்ணி (செய். 207, 208) ஆச்சரியப்படுகின்றனர்! இந்த கருடன் ஆதிசேஷனின் சிஷ்யனாக இருக்கத் தகுதி படைத்தவனே (சந்தேகமில்லை) என பாராட்டுகிறார்கள். அப்பொழுது பகவான் நாராயணனின் கட்டளைப்படி, ஜயன், விஜயன் என்ற விஷ்ணுவின் மெய்க்காப்பாளர்களும் கருடனைத் தூக்கித் தாங்குகிறார்கள்!! கருடனும் பகவானிடம் ஏதோ தெரிவிக்கிறான்!!

நாரதரும் கந்தர்வராஜனான வஸுபூதியும் தாங்களும் பகவானை வாழ்த்தி வணங்கி, அருகில் இருந்து அவர்களின் பேச்சைக் கேட்க வேண்டுமென்று பகவானை அணுகு கின்றனர். அரங்கத்தில் பகவான், ஜய விஜயர்கள் சூழ கருடன் வணங்கி நிற்கக் காட்சியளிக்கிறார். கருடன் மெய்ம்மறந்து 209, 210, 211 செயுட்களில் பகவானைத் துதிக்கிறான். நாராயணினின் கல்யாண குணங்களையும், கிருஷ்ணாவதாரத்தின் பிரபாவங்களையும் கூறி அமிருத கலசத்தை நாராயணனின் பாதங்களில் வைத்து மறுபடியும் விழுந்து நமஸ்கரிக்கின்றான்.

வஸுபூதியும், நாரதரும் பகவானைத் துதிக்கிறார்கள். இவ்வாறு துதிக்கப்பட்ட பகவான் கருடனின் பக்தியையும், பலத்தையும் மெச்சி, கருடா! உன்னை உயரே கொடியில் வைத்துவிட்டு, உன் கீழே கருடத்வஜனாக இருக்கப் போகிறேன் எனப் புகழ்கிறார். செய்யுட்கள் 212, 213 இவற்றை விவரிக்கின்றன. கருடனுக்கு அளவற்ற மகிழ்ச்சி ஏற்படுகிறது! நாராயணனிடம் சொல்லாமல் அமிருத கலசத்தைக் கொண்டுவந்தது சரியல்ல என்றுணர்ந்து அவ்வாறு செய்ததற்கு மன்னிப்புக் கேட்டும், எவ்வாறு செய்யவேண்டும் எனக் கூறுகிறாரோ அவ்வாறு செய்ய வேண்டும் என நினைத்து நாராயணனிடம் மன்னிப்புக் கோருகிறான்.

பகவான் திருப்தியடைந்து ஆதிசேஷன் எனக்குப் படுக்கையாயிருந்து என்னைத் தாங்குகிறானென்றால் அவனுடைய சிஷ்யனான நீயும் என்னைத் தூக்க முடியும்! ஆகவே எனக்கு வாகனமாக இருப்பாயாக என்று கூறு கிறார். (செய். 214, 215)

கருடன் எல்லையில்லா மகிழ்ச்சிகொண்டு, மறுபடியும் பூமியில் விழுந்தெழுந்து பரமனைத் துதிக்கிறான். வஸுபூதியும் நாரதரும் கருடனுடைய அஞ்சலியைக்

கண்ணுற்று பரவசமடைகின்றனர். (செய். 216) விஷ்ணுவின் மெய்காப்பாளர்களான ஜயனும் விஜயனும் அருகிலிருக்க லக்ஷ்மீசமேதராக விளங்கும் நாராயணனைத் தூக்கிக்கொண்டு அவர்கள் வாகனமாக இருப்பது எவ்வளவு பாக்கியம் என உணர்ச்சிவசப்படுறார்கள் !

இருவரும் ஒரு திவ்வியமான பாசுரத்தைப் பாடுகின்றனர். பரந்தாமனின் பெருமையை விளக்கும் அச்செய்யுள் 217 * நாடகாசிரியரால் மிக நேர்த்தியாக ப்ராஸம், யமகம் முதலியவற்றுடன் அமைக்கப்பட்டுள்ளது. தொடர்ந்து நாரதர் பாடும் 218, 219ம் செய்யுட்களும் பகவானின் பிரபாவத்தைப் போற்றி சிறப்பான இலக்கியச் சுவை ததும்பும் பாசுரங்களாக அமைக்கப்பட்டுள்ளன !! செய்யுட்கள் 220ம் 221ம் வஸுபூதியினால் பகவான் மீது பாடப்படுகின்றன. கிருஷ்ணனாக பிருந்தாவனத்திலும் யமுனையிலும் செய்த லீலைகளையெல்லாம் ஸ்துதித்து நாராயணனை வஸுபூதி புகழ்கிறான். இச்சுலோகங்கள் இலக்கிய நயமுடன் இருந்தாலும் நாடகத்தின் வேகத்தை தடுப்பதுபோல் காணப்படுகின்றன. அவ்வாறே நாரதர் பாடும் துதிகளும் அமைகின்றன.

செய். 222லும் 223லும் கருடன் நாரதரையும் வஸுபூதியையும் பார்த்து வினயத்துடன் நன்றி கூறுகிறான். இந்த செய்யுட்களும் நாடகத்தின் வேகத்தைச் சற்று குறைக்கின்றன ! நாரதரும் வஸுபூதியும் மேலும் கருடனைப் பற்றி சம்பாஷணையில் ஈடுபடுகின்றனர்.

---

* செய்யுள் 217 வினதானந்த வியாயோகத்தில்

மந்தாராணாம் தாம திவ்யம் ததானம்
தேவைர்வந்த்யம் தீவ்ய திந்தீவ ராக்ஷம் ।
நந்தாமந்தானந்த ஸந்தோக கந்தம்
வந்தே தேவம் தேவகீ நந்தனம் தம் ॥

(செய். 224) நாரதர் வஸுபூதியின் விமானத்திலிருந்து இறங்கி, கருடனின் மற்ற காரியங்களை (மீதி இருக்கும் காரியங்களை பார்க்கப்போவதாகக் கூறி வஸுபூதிக்கு விடையளிக்கிறார். கருடன் தான் மேற்கொண்ட காரியத்தை முடிக்க, முழுமுயற்சியுடன் தொடர்ந்து எதிர்ப்பை சமாளித்து அமிருத கலசத்தை எடுத்து விடுகிறான். செய்யுட்கள் 225, 226, 227, 228, 229, 230 முதலியவற்றில் நாடகாசிரியர் விவரங்களை விஸ்தரிக்கிறார். ஏற்கனவே கூறியபடி நாரதர் வஸுபூதியின் சம்பாஷணையும், அவர்கள் செய்யுட்களும் கருடனின் செய்யுட்களும் நாடகப் போக்கின் வேகத்தை சிறிது குறைத்துவிடுகின்றன. ஆனால் செய்யுட்கள் கவிநயத்துடனும் இலக்கியச் செறிவுடனும் அமைந்திருக்கின்றன.

231வது செய்யுளில் நாராயணன் கருடனிடம் வரம் ஒன்று கேட்பாயாக என்று கூறுகிறார். உன் பக்தியைக் கண்டு மகிழ்கிறேன் என்றும் அனுக்ரஹம் செய்கிறார். கருடன் தான் குற்றம் செய்துவிட்டதாக எண்ணி மன்னிப்புக் கோருகிறான். விஷ்ணுவிற்கு வாகனமாய் இருக்கும் வாய்ப்பைப் பெற்றும், ஆதிசேஷனுக்கு சகோதரனாகவும் சீடனாகவும் இருக்கும் பாக்கியத்தைப் பெற்றும், இருப்பதால் அதற்காக நன்றி தெரிவிக்கின்றான் ஆதிசேஷனிடம் அமிருத கலசத்தை குருதக்ஷிணையாகக் கொடுக்கவும், அனுமதி கேட்டு பகவானைத் துதிக்கிறான்.

(செய். 232)

அமிருத கலசத்தால் உன் எண்ணத்தை நிறைவேற்றிக் கொள் என்று அனுக்ரகித்துவிட்டு, நாராயணன் அந்தர்யாமியாகிவிடுகிறார். (செய். 233) கருடன் பகவானை மறுபடியும் போற்றிவிட்டு, தேவேந்திரனிடமும் நட்பை ஏற்படுத்திக்கொண்டு, அமிருத கலசத்துடன் கீழ்திசை நோக்கி புறப்படுகிறான். (செய். 234) தன் தாயார் வினதா தன்னையும் அமிருத கலசத்தையும் எதிர்பார்த்துக்

கொண்டிருப்பாள் என நினைக்கிறான். கிழ்திசை நோக்கி புறப்பட்ட கருடன் வேகமாகப் பறந்து நேராகத் தன் தாயாரிருக்குமிடம் வந்திறங்குகிறான். (செய். 235, 236)

அவள் எதிரில் அமிருத கலசத்தைக் காலடியில் வைத்து வணங்குகிறான்! அமிருத கலசம் காலில் வந்து விழுந்ததைப் பார்த்த வினதா மெய்ம்மறந்து, கருடனைக் கட்டி அணைத்து உச்சி முகர்ந்து வரவேற்கிறாள்! குழந்தாய் கருடா! தாய்ப்பசு நக்கிக் கொடுத்து தனது கன்றின் காயத்தை ஆற்றுவது போல், உன் தேகத்தில் காயமிருந்தால் அவ்வாறே நான் ஆற்றுகிறேன். உன்னைத் தலையில் தூக்கி வைத்துக்கொண்டு ஆடிப்பாடி மகிழ்கிறேன்! என்கிறாள். (செய். 237)

தாயாரின் அன்பான வார்த்தைகள் கருடனின் மனதை நெகிழ வைக்கின்றன! புத்திர வாத்ஸல்யத்தினால் எல்லா தாய்மார்களும் தங்கள் குழந்தைகளிடம் அன்பு செலுத்துவது இயற்கைதானே என்கிறான். வினதாவும், விடாமல், நீ புறப்பட்டது முதல் இங்கு வந்தது வரை எல்லாவற்றையும் விருத்தாந்தமாகக் கூறு என்கிறாள். நாரத பகவான் இங்கு இதோ வந்துள்ளார். விவரங்களை எடுத்துரைப்பார்! பாம்புகளுக்கு நான் அமிருத கலசம் கொண்டுவந்துள்ளதை முதலில் தெரிவிக்கிறேன் என்று கருடன் கூறுகிறான். இங்கு கருடன் வினதா சம்பாஷணை மிக பாசமுடன் நேர்த்தியாக கவி ஸ்ரேஷ்டரால் கையாளப் பட்டிருக்கிறது.

நாரதர் பிரவேசித்ததும், ஆதிசேஷனும் கத்ருவும் வருகிறார்கள். அவரவர் மரியாதைக்கேற்றவாறு நமஸ்காரம் ஆசீர்வாதம் முதலியவற்றை பராமரித்துக் கொள்கின்றனர். ஆதிசேஷன் எது செய்வது சரி என்று தன் தாய் கத்ருவை வினவ, கத்ரு பேசாமல் இருக்கும்படியும், தக்க சமயத்தில் தேவ ரஹஸ்யமான இச்செய்தி

வெளியாகும் எனவும் சொல்கிறாள். வினதாவிடம் கத்ரு சொல்கிறாள் "வினதே! ஆதிசேஷனும் கருடனும் நாம் ரஹஸ்யமாகச் செய்த காரியத்தை அறிய மாட்டார்கள். அதைத் தெரிவிப்பது உசிதமென நினைக்கிறேன்." (செய். 238) ஆதிசேஷனும் கருடனும் நமது தாயார்கள் செய்தது நன்மை செய்யக்கூடிய பெரிய விஷயமாகவும் இருக்கும் என்கின்றனர். அவர்கள் இவ்வாறு மகிழ்ச்சியுடன் பேசிக்கொண்டிருக்கும் பொழுது நாரதர் தாய் தன் குழந்தைக்கு நன்மையே செய்வாள் எனக் கூறுகிறார். (செய். 239)

கத்ரு விவரம் கீழ்க்கண்டவாறு அளிக்கிறாள். "நான் சொல்லப்போகும் விஷயம் வயதுவந்தவர்கட்குத் தெரியும். நானும் வினதாவும் சிறுபிராயத்தின்போது, எங்கள் தகப்பனார் மரீசி (மகரிஷி) இல்லாத சமயத்தில், துர்வாச முனிவர் எங்களாசிரமத்திற்கு வந்தார். வினதாவிடம், முனிவர்கட்கு அர்க்யம் முதலான உபசாரங்களைச் செய்யுமாறும், பூக்களை பறித்துவருமாறும் கூறினேன் உடனே பூப்பறிக்கச் சென்ற வினதா சிறிது தாமதப்படுத்தியதால் முனிவர் கோபம் கொண்டு வினதாவிடம், "பதினைந்து நூறு வருடங்கள் நீ அடிமையாயிருக்கக் கடவாய்" என சாபமிட்டுவிட்டார்! ஏன் காரணமில்லாமல் கோபித்துக் கொள்கிறீர்கள் என நான் கேட்டபொழுது, பிள்ளைகளையே கொல்லுபவளாகக் கடவது" என்று என்னைச் சபித்துவிட்டார்! நான் பதிவிரதையானபடியாலும், பெரியோர்களுக்கு பணிவிடை செய்பவளாயிருப்பதாலும், கர்ப்பத்தில் முழுவடிவமில்லாது வசிக்கக் கடவது என அவருக்கு சாபம் கொடுத்தேன்.

நாரதர் கத்ருவிடம் அதனால்தான் துஷ்டர்களான ஆயிரக்கணக்கான சர்ப்பங்களைக் கஸ்யபரிடம் பிள்ளைகளாகப் பெற்றாயோ? எனக் கேட்டார். கத்ருவும் 'ஆம்' என்றாள்; மேலும் வினதாவிற்கும் இரண்டு

பிள்ளைகளுக்குமேல் வேண்டாம் என்றும் உபதேசித்தேன். கருடனையும் பாம்புகளுடன் விளையாடி விரோதமில்லாமல் இருக்க ஏற்பாடு செய்தேன் என்று கூறினாள்.

நாரதரும், இதை ஆமோதித்து "பரீக்ஷித் (மகாராஜா) தின் சர்ப்ப யாகத்தில் எல்லா பாம்புகளையும் அக்னி அழித்து விடுவான், மீதி உள்ளவைகளை கருடன் பார்த்துக் கொள்வான் என்பதை அறிந்துதான், என் தந்தை பிரம்மா, கத்ருவான உங்களைப் பாராட்டியும், கஸ்யபருக்கு சமாதானம் சொல்லியும் உலக நன்மைக்காக கருட மந்திரத்தையும் உபதேசித்தாரோ? என்று இப்பொழுது தான் தோன்றுகிறது" என்று கூறினார். வினதாவும் நாரதர் சொன்னதை ஒப்புக்கொண்டு தனக்கு இரண்டு பிள்ளைகளுக்கு மேல் கூடாது என்றும் கட்டளையிடப் பட்டேன் என்கிறாள். நாரதர், வினதா, கத்ரு இவர்களின் சம்பாஷணை, கருடனும் ஆதிசேஷனும் இருக்கும் போது இருவர் முன்னிலையிலும், நாடகாசிரியரால் மிக நேர்த்தியாக (செய்யுட்கள் 240, 241, 242 இவைகளுடன்) அமைக்கப்பட்டுள்ளது.

கத்ரு இதைக்கேட்டு, தான் அனந்தன் முதலான எட்டு சர்ப்பங்களை குலத்திற்காகவும், மற்றவைகளை, சாபப்படி கருடனுக்கு உட்பட்டதாகவும் செய்து, வினதா எவ்வாறு அருண - கருடர்களால் புத்திரபாக்கியமுள்ளவளோ, அவ்வாறே நானும் சேஷன் முதலான பாம்புகளால் புத்திரபாக்கியமுள்ளவளாக இருப்பேன் என்று சொன்னாள். (செய். 243) வினதா இதைக் கேட்டு, தான் சக்களத்தியாயிருந்தாலும் கத்ருவின் பெருந்தன்மையைப் பாராட்டி அவளை வணங்குகிறாள். (செய். 244) கத்ருவும் வினதாவை சகோதரி எனக் கூறி அவளைக் கட்டிக் கொள்கிறாள்.

இக்காட்சியைக் கண்ணுற்ற ஆதிசேஷன், குருடன் கண் பார்வை பெற்றதுபோல இந்த ரகசியத்தை நான்

